# பகவத் பாதை

# BAGAVATH PATHAI

தமிழ் மாத இதழ்

மலர் 5 | இதழ் 8 | அக்டோபர் 10, 2018 | வருடச்சந்தா ரூ 100/- Volume : 5 | Issue 8 | October 10th, 2018 | Annual Subscription Rs. 100/-



ஞானம் அடைவது எதற்காக?



**பகவத் பாதை** தமிழ் மாத இதழ்

நமக்கு ஏற்படும் உணர்ச்சி வெளிப்பாடுகளை நிர்வாகம் செய்யும் பொறுப்பை கையில் எடுக்கும் தோறும் சுழலும் மனப்போராட்டமும் ஏற்பட்டுவிடும். அனைத்து அகப் பிரச்சினைகளுக்கும் நமது மனப் போராட்டமே காரணம். அக உணர்ச்சிகளை பொறுத்தவரையில் அவை எவற்றையும் பிடித்து வைக்கத் தேவையில்லை என்ற அறிவுப்பூர்வமான புரிதலே ஞானம்.

– ஸ்ரீ பகவத்

# ஞான உறுதி முகாம்

ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களுக்கு வணக்கம்.

**ஞானப்புரிதலை புரிந்து கொள்வது எவ்வளவு முக்கியமோ அதை விட பல மடங்கு முக்கியமானது புரிந்து கொள்ள வேண்டியவற்றை புரிந்து கொண்டோம் என்று உறுதி செய்துகொள்வது.**

ஐயா வழங்கும் ஞானப் புரிதல் நமக்குள் வெறும் கருத்தாக மட்டும் பதிவதால் பயன் ஏதும் இல்லை. அந்தப் புரிதல் நம்மால் கண்டுபிடிக்கப்பட்ட உண்மையாக மாற வேண்டும். அப்போதுதான் அது நமக்கு விடுதலையைக் கொடுக்கும்.

இதற்காக சிறப்பு ஞான உறுதி முகாம் (Enlightenment Confirmation Camp) நடைபெற உள்ளது.

இடம் : **ஸ்ரீ பகவத் பவன்,** ஜருகு மலை அடிவாரம், கொடம்பக்காடு, பெரியகவுண்டாபுரம், சேலம்-636 106.

நாள் : **30.12.2018 மாலை 5.00 மணிமுதல் 1.1.2019 மதியம் 3.00 மணிவரை**

செலவுப் பகிர்வு **ரூ. 3000**/- நபர் ஒருவருக்கு

**இந்த சிறப்பு ஞான உறுதி முகாமில் கலந்து கொள்வதற்கான தகுதிகள் :**

1. ஸ்ரீ பகவத் ஐயாவின் ஞான முகாம்களில் குறைந்தபட்சம் 2ல் கலந்திருக்க வேண்டும்.
2. **ஞான வாழ்வின் நடைமுறை யதார்த்தங்கள்** என்ற நூலினை படித்திருக்க வேண்டும்.

**மேற்கண்ட நிபந்தனைக்கான காரணம் :**

முதல் முறையாக ஞானமுகாமில் பங்குபெறுவர்களிடமும் பகிர்ந்துகொள்ள முடியாத பல விசயங்களையும் நடைமுறை யதார்த்த உண்மைகளையும் இந்த சிறப்பு ஞான முகாமில் பகிர்ந்து கொள்ளப் போகிறோம். இவை மேற்குறிப்பிட்ட தகுதியானவர்களுக்கு ஞானத்தை உறுதி படுத்துவதற்கும், தேடுதலை நிறைவு செய்து விடுதலை பெறுவதற்கும் பேருதவியாக இருக்கும். ஆனால் புதிய அன்பர்களுக்கு குழப்பத்தை ஏற்படுத்திவிடும் என்பதால் தவிர்க்கிறோம். அதனால் இந்நிகழ்ச்சியை **Youtube** லும் வெளியிட மாட்டோம் என்பதை தெரிவித்துக்கொள்கிறோம்.

30 அன்பர்கள் மட்டுமே கலந்து கொள்ள முடியும். முன்பதிவு அவசியம்.

**முன்பதிவு செய்யும் வழிகள்**

**M.O, D.D. (or) Cheque :** வரைவோலை அனுப்புபவர்கள் **A/c Sri Bagavath Mission** என்ற பெயரில் சேலத்தில் செல்லத்தக்கதாக அனுப்புமாறு கேட்டுக்கொள்கிறோம்.

**Direct Payment :** நேரடியாக வங்கியில் செலுத்துபவர்கள் கீழ்க்கண்ட வங்கிக் கணக்கில் செலுத்தலாம்.

**HDFC Bank Sri Bagavath Mission A/c No. 15907620000075,**
**NEFT IFSC : HDFC 0001590 Car Street Branch, Salem**

## உள்ளே


| | |
|---|---|
| ஞானம் அடைவது எதற்காக? | 3 |
| கேள்வி பதில் | 6 |
| யோக சிகிச்சை புதிய நூல் | 7 |
| ஆசிரியர் பகுதி | 8 |
| நவம்பர், 4 நாள் ஞான முகாம் | 9 |
| நிகழ்ச்சி நிழல்கள் | 10 |
| ஜென்கதை – காமமும் விடுதலையும் | 11, 12 |


கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? (அ) பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?




Sri Bagavath Mission

31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu India
V.A.P. SHARAVANAN - 99942 05880
Dr. N. KAILASAM - 94432 90559
K.S. JEEVAMANI - 97891 65555
www.sribagavathmission.org
www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

This book Designed by
SRI ESPARI GRAPHICS, Salem-3.
Cell : 90926 46260, 98651 34075

**ஸ்ரீ பகவத் மிஷன்**
31, இராமலிங்கசாமி தெரு, அம்மாபேட்டை, சேலம்-3.
கைப்பேசி : 9994205880, 97891 65555



# ஞானம் அடைவது எதற்காக?



- ஸ்ரீ பகவத்

கடந்து போன செப்டம்பர் மாதத்தில் சென்னையில் நடந்த ஞான முகாமில் அன்பர் ஒருவர் கேள்வி கேட்டிருந்தார்.

"நாம் எதற்காக ஞானம் அடைய வேண்டும்?" இதுதான் அவரது கேள்வி.

பெரும்பாலும் நமது முகாம்களில் கலந்து கொள்பவர்கள் அனைவருமே "ஞானமடைவது எவ்வாறு?" என்ற கேள்வியோடுதான் வருவார்கள். "எதற்காக ஞானம் அடைய வேண்டும்?" என்ற கேள்வியோடு இருப்பவர்கள் எவரும் நமது கூட்டங்களுக்கு வருவதில்லை.

ஆனாலுங்கூட ஞானம் என்ற பெயரைக் கேள்விப்படும்போது, "அது ஏன்?" என்ற கேள்வி ஒரு சராசரி மனிதருக்கு ஏற்படுவதில் வியப்பில்லை.

சராசரி மனிதருக்கு ஞானம் என்றால் என்ன என்பது தெரியாது. அவர்களுக்குத் தெரியாத ஒன்றை அடைந்திடுமாறு கூறுவோமேயானால் "அதை ஏன் அடைய வேண்டும்?" என்று கேட்கத்தான் செய்வார்கள்.

சராசரி மனிதர்களை விட்டுவிடுவோம்.

ஆன்மிகத்தில் ஈடுபாடு காட்டுபவர்களை மட்டும் எடுத்துக் கொள்வோம். அவர்கள் என்ன கூறுவார்கள்?

ஞானம் என்றால் என்ன?

தாங்கள் ஞானம் அடைந்தபோது விசேடமான சில அனுபவங்கள் ஏற்பட்டதாகச் சிலர் குறிப்பிடுகின்றனர்.

ஜே. கிருஷ்ணமூர்த்தியிடம் இதுபற்றிக் கேட்கும் போது "ஞான நிலை என ஒரு நிலையே கிடையாது" எனக்கூறி விடுகிறார்.

ஞானி எனப் போற்றப்படும் ஒருவரே ஞானநிலை என்று எதுவும் கிடையாது எனக்கூறி விடுகிறார்.

உண்மையில் ஞான நிலை என ஒன்று இருக்கிறதா அல்லது இல்லையா?

வேதாந்த சாஸ்திரங்கள் இதுபற்றி என்ன கூறுகின்றன?

நாம் நம்மைப் பற்றிய கருத்து ஒன்றை வைத்துக் கொண்டிருக்கிறோம்.

உடலாலும் மனதாலும் ஆக்கப்பட்ட ஒருவராக நம்மைப் புரிந்து கொண்டிருக்கிறோம்.

தோன்றி மறையக்கூடிய ஒன்றாகவும், பாதிப்புகளுக்கு உட்படும் ஒன்றாகவும் நாம் இருப்பதாக எண்ணிக் கொண்டிருக்கிறோம்.

உண்மையில் நமது நிஜ சொரூபம் உடலோ மனதோ அல்ல.

அவை இரண்டையும் கடந்த ஆன்மாதான் நமது நிஜ சொரூபமாகும்.

தோற்றமும் மறைவும் இல்லாத, நித்தியமான, ஆனந்த சொரூபமான ஒன்றுதான் நம்முடைய நிஜ சொரூபம்.

"நான் ஆன்மாதான் என்பதை அறியாமல் இருப்பது அஞ்ஞானம்."

"நான் உடலையும் மனதையும் கடந்த ஆன்மாவாக இருக்கிறேன் என்பதை அறிந்திடுவது ஞானம்."

- இப்படி சாஸ்திரங்கள் விவரிக்கின்றன.

நம்மை உடலோடும் மனதோடும் சம்பந்தமுடைய ஒருவராகக் கருதும்போது, மனம் மற்றும் உடலோடு சம்பந்தப்பட்ட அத்தனை பிரச்சினைகளும் நமக்கு ஏற்பட்ட பிரச்சினைகளாக இருந்து நம்மைப் பாதிக்கின்றன.

நாம் நம்மை, உடலையும் மனதையும் கடந்த ஆன்மாவாகக் கருதும்போதுதான் மேலே சொன்ன பாதிப்புகளிலிருந்து விடுபட்டு விடுகிறோம்.

அப்படி விடுபடுவதை விடுதலை மோட்சம் - முக்தி என்று சாஸ்திரங்கள் விவரிக்கின்றன.

விடுதலை அடைவதன் மூலம் இன்ப துன்ப பாதிப்புகளிலிருந்து விடுபட்டு விடுகிறோம்.

நாம் அலுவலகத்தில் அமர்ந்து நமது பணிகளில் ஈடுபட்டுக் கொண்டிருக்கிறோம்.

நம்முடன் வேலை பார்க்கும் ஒருவருக்கு போன் வருகிறது. உடனே அவர் நம்மிடம் ஓடி வந்து "உங்கள் வீட்டுப்பக்கம் வீடுகள் தீப்பிடித்து எரிந்து கொண்டிருப்பதாகத் தகவல் வந்துள்ளது" என்று கூறுகிறார்.

நாமும் பதட்டத்துடன் நமது வண்டியை எடுத்துக் கொண்டு விரைகிறோம்.

நமது தெருவில் நுழைந்ததுமே நமது வீடும், மாடியும் தெரிகிறது. நமது மாடியிலிருந்து கரும்புகை கிளம்புவதைப் பார்த்து அதிர்ச்சியடைகிறோம்.

நமது வீட்டை நெருங்கிப் பார்க்கும் போது நெருப்பு நமது வீட்டில் பிடிக்கவில்லை என்பது தெரிகிறது.

பக்கத்துத் தெருவில் பிடித்த தீயின் புகையானது தூரத்திலிருந்து பார்க்கும்போது நமது மாடியிலிருந்து வெளிப்பட்டது போன்ற தோற்றத்தை ஏற்படுத்தி உள்ளது. அதனால் நமக்கு பதட்டம் ஏற்பட்டு விட்டது.

பாதிப்பு நமக்கல்ல என்று தெரிந்ததும் பதட்டம் நீங்கி மன அமைதி சாந்தி ஏற்படுகிறது.

"இதுபோல் உடலுக்கும், மனதுக்கும் ஏற்படும் பாதிப்புகள் யாவும், "**உண்மையான நமக்கு**" ஏற்பட்ட பாதிப்பு அல்ல என உணரும்போது நமக்கு சாந்தி ஏற்படுகிறது" என்பது சாஸ்திரங்களின் கூற்று.

சாஸ்திரங்களின் கூற்றுப்படி நாம், உடலையும் மனதையும் கடந்த ஆன்மா என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும்.

வேதாந்த சாஸ்திரங்கள் யாவும் ஞானத்தை விட, முக்திக்குதான் முக்கியத்துவம் கொடுக்கின்றன.

ஞானம் என்பது ஒரு வழிதான். அந்த வழிதான் நம்மை முக்திக்கு அழைத்துச் செல்கிறது.

ஞானம் என்ற பெயரிலும், முக்தி என்ற பெயரிலும் ஏதேதோ வினோதமான நிலைகளையெல்லாம் கற்பிதம் செய்து வைத்துள்ளோம்.

உலகம் அனைத்தையும் ஒன்றாகக் கண்டதாக தானும் உலகமும் வேறில்லை என்று கண்டதாக சில ஞானிகள் கூறுகின்றனர்.

ஞானம் பெற்றதும் ஆனந்தப் பரவசநிலை அடைந்து விட்டதாக சில ஞானிகள் கூறுகின்றனர்.

உலகம் அனைத்தையும் ஒன்றாகக் கண்டிடுவதுதான் ஞானத்தின் பலனா?

ஆனந்தப் பரவசநிலை அடைந்திடுவதுதான் ஞானத்தின் பலனா?

அனைத்தையும் ஒன்றாகக் காண்பது மற்றும் ஆனந்தப் பரவசநிலைகள் அனைத்தும்,

உடல் மற்றும் மனதின் பங்களிப்பால் மட்டுமே ஏற்படுகின்றன.

உடல் - மன அனுபவங்களை ஆன்மாவோடு தொடர்புடையதாக எடுத்துக் கொள்ள முடியாது.

ஆன்மிக அனுபவங்கள் என கூறப்படும் அனைத்தும்

உலகியல் அனுபவங்களைப் போன்று உடல் மற்றும் மன அனுபவங்களே.

உடல் மற்றும் மன அனுபவங்களுக்கு நாம் முக்கியத்துவம் கொடுக்கும் தோறும்

உடல் மற்றும் மனதுக்குதான் நாம் முக்கியத்துவம் கொடுக்கிறோம்.

உடல் மற்றும் மன அனுபவங்களுக்கு நாம் முக்கியத்துவம் கொடுக்காத பட்சத்தில் அந்த அனுபவங்கள் என்ன ஆகும்?

தோன்றிக் கொண்டிருக்கும் அனைத்து அனுபவங்களும் தாமாகவே மறைந்து விடும்.

தோன்றிய அனுபவங்கள் யாவும் மறைந்து விட்டதாக வைத்துக் கொள்வோம். புதிய அனுபவங்கள் எவையும் தோன்றாதா?

ஒவ்வொரு கணத்திலும் புதிது புதிதாகப் புது அனுபவங்கள் தோன்றவே செய்யும்.

அப்படித் தோன்றி வரும் அனுபவங்களுக்கு நாம் முக்கியத்துவம் கொடுக்காத பட்சத்தில்

அவை யாவும் வந்தது போன்று சுலபமாக மறைந்து போய்விடும்.

மனம் மற்றும் உடல் அனுபவங்களுக்கு முக்கியத்துவம் கொடுக்காத நிலையில் அவை சுலபமாக மறைந்து விடுகின்றன.

மாறாக அவற்றுக்கு நாம் முக்கியத்துவம் கொடுப்பதாக வைத்துக் கொள்வோம். என்ன ஆகும்?

முக்கியத்துவம் கொடுப்பது என்பது என்ன?

நமக்கு மகிழ்ச்சி ஏற்படுகிறது. மன நிம்மதி ஏற்படுகிறது. உற்சாகம் ஏற்படுகிறது. இவை நமக்குப் பிடித்திருக்கிறது. இவை என்றென்றும் நம்மோடு நீடித்திருந்தால் நன்றாக இருக்குமே என்ற எதிர்பார்ப்பு நமக்குள் ஏற்படுகிறது.

இதுபோல் வருத்தம், பயம், கோபம், அருவருப்பான உணர்ச்சி இப்படி ஏதாவது நமக்கு ஏற்படுகிறது. இவை நமக்குப் பிடிக்கவில்லை. இவை உடனடியாக நம்மை விட்டுப் போய் விட வேண்டும் என எண்ணுகிறோம். இவை மீண்டும் நமக்கு ஏற்படக்கூடாது எனவும் எண்ணுகிறோம்.

இந்த இரண்டு சந்தர்ப்பங்களிலும் நாம் என்ன செய்கிறோம்?

நமக்கு ஏற்பட்ட உணர்ச்சி வெளிப்பாடுகளை நிர்வாகம் செய்யும் பொறுப்பை

இந்த இரண்டு சந்தர்ப்பங்களிலும் நாம் நமது கைகளில் எடுத்துக் கொள்கிறோம்.

வேகமாக ஓடிக் கொண்டிருக்கும் ஆற்று நீரினுள் நாம் கையை விட்டால் என்ன ஆகும்?

ஓடிக் கொண்டிருக்கும் நீரினுள் "நில்" என்று கூறி கையை இட்டாலும் சரி,

அல்லது "ஓடு" என்று கூறி கையை

இட்டாலும் சரி,

நமது கையைச் சுற்றிலும் அந்த நீர் சுழல ஆரம்பித்து விடும்.

இப்படி நாம் நமக்கு ஏற்படும் உணர்ச்சிகளுக்கு ஆதரவாகச் செயல்பட்டாலும் சரி, அல்லது எதிராகச் செயல்பட்டாலும் சரி,

அங்கே ஒரு சுழலும், போராட்டமும் ஏற்பட்டு விடுகிறது.

நகர்ந்து செல்லும் அந்தப் பிரவாகத்தில் ஒரு தடங்கல் ஏற்பட்டு விடுகிறது.

- இதுதான் அகப் போராட்டமாக அமைந்து விடுகிறது.

- அகவிடுதலை பாதிக்கப்பட்டு விடுகிறது.

உண்மையில் அகவிடுதலை என்பது இயற்கையான நிகழ்வே ஆகும்.

அதில் ஏற்படும் பாதிப்புகள் தாம் செயற்கையானதாகும். தடங்கல்கள்தான் அகப்போராட்டந்தான் செயற்கையானதாகும்.

**உடல் மற்றும் மனதின் அனுபவங்களுக்கு முக்கியத்துவம் கொடுப்பது சரியல்ல எனப் புரிந்து கொள்வதைத்தான் ஞானம் எனக் கூறுகிறோம்.**

அப்படிப் புரிந்து கொள்வதன் மூலமாக மட்டுமே அகப்போராட்டம் நின்று விடுகிறது.

அகப்போராட்டம் நின்று போன நிலையில் நமது மன உடல் அனுபவங்கள் அனைத்தும்

ஒரு பிரவாகமாக எளிதாக ஓடி மறைகின்றன.

அக உணர்ச்சிகளைப் பொறுத்த வரையில் அவை எவற்றையும் பிடித்து வைக்கத் தேவையில்லை என்பதையும்

அப்படிப் பிடித்து வைக்க முயல்வதுதான் தவறானது என்பதையும்

புரிந்து கொள்வதைத்தான் நாம் "ஞானம்" என்ற பெயரில் குறிப்பிடுகிறோம்.

இது ஓர் அனுபவமன்று. இது ஓர் அறிவு பூர்வமான தெளிவு மட்டுமே.

- ஓர் Intellectual Understanding மட்டுமே.

ஞானம் என்பது ஓர் அனுபவமல்ல.

அது அறிவுபூர்வமான ஒரு புரிதல் மட்டுமே ஆகும்.

மனம் மற்றும் உடலில் ஏற்படும் உணர்ச்சிகள் யாவும் இயற்கையாகவே அவ்வாறு ஏற்படுகின்றன.

தோன்றிய அனைத்தும் மறு வினாடியே மறைந்திடுவதும் இயற்கையே ஆகும்.

இங்கு நம்முடைய முயற்சி எதுவுமே தேவையில்லை.

தாமாகத் தோன்றி, தாமாகவே மறைந்து விடுகின்றன.

இப்படித் தோன்றுவதும் மறைவதும் எளிதாகவும், இயற்கையானதாகவும் அமைந்திடுவதைப் பிரவாகம் என்று நாம் பெயரிட்டுள்ளோம்.

இதையே முக்தி, மோட்சம் அல்லது விடுதலை என்று சாஸ்திரங்கள் அழைக்கின்றன.

"நமக்கு ஏற்படும் உடல் மற்றும் மன உணர்ச்சிகளைப் பிடித்து வைக்கத் தேவையில்லை" என்ற அறிவுப்பூர்வமானப் புரிதல் தெளிவு இருந்தால் மட்டுமே

நாம் நமது மனம் மற்றும் உடல் உணர்ச்சிகளை இயற்கையாக வந்து செல்ல அனுமதிப்போம்.

இயற்கையான செயல்பாட்டுக்கு அனுமதி வழங்கியது ஞானம்.

இயற்கையான செயல்பாடுதான் விடுதலை அல்லது முக்தி.

இயற்கை செயல்படும் போது அகத்தளவில் நாம் எப்போதும் புதுமையாகவே இருக்கிறோம்.

பழமை அனைத்தும் தாமாகவே மறைந்து விடுகிறது.

நமக்கு ஏற்படும் உணர்ச்சிகள் எவையாவது நமது செயல்பாடுகளுக்குத் தேவைப்படும் பட்சத்தில்

நாம் அந்த உணர்ச்சிகளை நமது செயல்களுக்கு பயன்படுத்திக் கொள்ளலாம்.

ஆனால் அகத்தைப் பொறுத்த வரையில் எந்த உணர்ச்சிகளும் உயர்ந்ததோ தாழ்ந்ததோ அல்ல.

எந்த உணர்ச்சிகள் வேண்டுமானாலும் நமக்கு ஏற்படலாம். அதில் எந்த தவறும் கிடையாது.

செயல்களுக்குத் தேவையானால் எடுத்து பயன்படுத்திக் கொள்ளலாம்.

தேவையில்லாதவற்றை எடுக்காமல் விட்டு விட்டால் தாமாக மறைந்து விடும்.

உணர்ச்சிகளைப் பொறுத்த வரையிலும் அனைத்தும் இயற்கையானதே அனைத்தும் புனிதமானதே.

செயல்களில் மட்டும் சரியானது, தவறானது உண்டு. நல்லது, கெட்டது உண்டு.

**மனஉணர்ச்சிகளைப் பொறுத்த வரையில், அவை தோன்றுவதுதான் இயற்கை.**

**அப்படித் தோன்றிய உணர்ச்சிகள் யாவும் மறைவதுதான் இயற்கை.**

**அப்படி மறைவதுதான், தோன்றியதை விட உயர்வானது.**

**உணர்ச்சிகள் மறைவது என்பதுதான் உணர்ச்சிகளின் விடுதலை.**

**அதுதான் விடுதலை அல்லது முக்தி.**

**அதுதான் ஞானத்தின் பலன்.** 

V.A.P. **சரவணன்,** சேலம்.
செல் : 99942 05880

# ? கேள்வி? பதில்...

## மரண பயத்திலிருந்து விடுபட முடியுமா?

**கேள்வி :** நான் சொந்தமாக ஜவுளித் தொழில் செய்து வருகிறேன். ஸ்ரீ பகவத் ஐயாவின் நூலைப் படித்த பிறகு முந்தைய நிலையை விட தற்போது நன்றாக இருந்து வருகிறேன். ஆனாலும் எனது மிக நெருங்கிய சம வயது உள்ள நண்பர்கள் இருவரின் மாரடைப்பால் நிகழ்ந்த அடுத்தடுத்த மரணம் என்னை மிகவும் பாதித்துள்ளது. இதனால் எனக்கும் இது போல் ஏற்பட்டு விடுமோ என்ற பயம் இருந்து கொண்டே இருக்கிறது. இந்த பயத்தால் இரவு நேர பயணம், தொழில்ரீதியாக மேற்கொள்ளும் பயணம் ஆகியவற்றை முன்பு போல் எதிர்கொள்ள முடியவில்லை. அய்யாவின் புரிதலால் எத்தனையோ எண்ணங்களை சிந்திப்பாக மாற்றாமல் அதன் போக்கில் விட முடிகிறது. ஆனால் இந்த பயம் மட்டும் சிந்திப்பாக மாறுவதையும் அதனால் ஏற்படும் உடல் படபடப்பையும் தவிர்க்க முடியவில்லை. இந்த இடத்தில் ஐயாவின் புரிதல் எனக்கு எவ்வளவு முயன்றும் உதவவில்லை. அது ஏன்? நான் இங்கு என்ன தவறு செய்கிறேன்? நான் இன்னும் நன்றாக புரிந்து கொள்ளவில்லையா? இதிலிருந்து விடுபடுவது எவ்வாறு?

**பதில் :** எண்ணத்தை சிந்திப்பாக மாற்றாமல் விட்டு விட்டால் எண்ணத்தின் கோரப்பிடியில் இருந்து தப்பிவிடலாம் என்று நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள். இதுதான் அய்யாவின் புரிதல் என்றும் தவறாக புரிந்து கொண்டிருக்கிறீர்கள். நம்மை பாதிக்கும் எண்ணம் சிந்திப்பாக தாமாக மாறுவதை நம்மால் தடுக்கவே முடியாது. மனத்தளவில் நாம் செய்வதற்கு எதுவுமில்லை. நம்மால் எதுவும் செய்யவும் முடியாது என்பதை புரிந்து கொள்வதுதான் ஞானம். மனதில் சில நேரம் நம்முடைய கட்டுப்பாட்டையும் மீறி வேண்டாத எண்ணம் சிந்திப்பாக மாறினாலும் அதனால் உடலில் இரசாயன மாற்றம் ஏற்பட்டு படபடப்பு ஏற்பட்டாலும் கூட அதற்கும் நாம் ஒன்றும் செய்ய முடியாது என்பதை விளங்கிக் கொள்வது தான் சரியான புரிதலே. அகத்தில் ஏற்படும் எண்ணம் சிந்திப்பாக மாறுவதும், மாறாமல் இருப்பதும் நமது மனக்கட்டுப்பாட்டில் இல்லை என்ற மன தோல்வியை - இயலாமையை புரிந்து கொள்வதுதான் ஞானம் என்று பகவத் ஐயா குறிப்பிடுகிறார்.

உங்கள் நண்பர்கள் இருவரின் அடுத்தடுத்து நிகழ்ந்த மரணம் உங்களை மிகவும் பாதிப்படையச் செய்துள்ளது. உங்கள் நிலையில் யார் இருந்தாலும் அவர்களுக்கும் இதே போல் பயம் ஏற்படத்தான் செய்யும். நண்பரின் மரணத்தை நீங்கள் அருகில் இருந்து பார்த்தது, ஹாஸ்பிட்டல் செல்வதற்கு முன்பாகவே அவர் மரணமடைந்தது, மேலும் கொஞ்ச நாட்களிலேயே இன்னொரு நண்பரின் மரணமும் அதே போல் நிகழ்ந்தது என அனைத்தும் ஒன்று சேர்ந்து உங்களுக்கு மிகுந்த பயத்தை ஏற்படுத்தியுள்ளது. அதனால் உங்களுக்கும் அதேபோல் மரணம் நிகழ்ந்து விடுமோ என்ற பயம் தொற்றிக்கொண்டது. இந்த பயத்தை எதிர்கொள்ள முடியாமல் தான் இரவு நேரப் பயணத்தை முன்புபோல் மேற்கொள்ள முடியவில்லை. மேலும் நீங்கள் தனிமையில் இருக்கும் சூழ்நிலையிலெல்லாம் இந்த பயம் உங்களை பற்றிக் கொள்கிறது. இந்த பயத்தால் ஏற்படும் இரசாயன மாற்றத்தால் உடல் படபடப்பு, வேர்த்தல், போன்றவை ஏற்படுகிறது. இதனால் நமக்கு ஏதோ ஆகிவிட்டது என்று மீண்டும் மீண்டும் மனதில் அதே பயத்தை தூண்டி உடலை வலுவிழக்கச் செய்து விடுகிறது.

இங்கு நாம் என்ன புரிந்து கொள்ள வேண்டும் பயம் என்பதும் ஓர் எண்ணமே. இந்த பயம் நம் அகம் சம்பந்தப்பட்டது - மனோரீதியானது. எனவே மனோரீதியான பயத்தைப் போக்க நமக்கு எந்த வேலையும் இல்லை என்பதை புரிந்து கொள்ள வேண்டும். அதே நேரம் நமக்கு ஏற்படும் பயம் நம்மை புறத்தில் திறம்பட பாதுகாத்துக் கொள்வதற்கான தூண்டுதல் உணர்வே ஆகும். உண்மையில் பயம் நமக்கு உதவி செய்யவே வந்துள்ளது. இந்த பயத்தை பயன்படுத்திக் கொண்டு முறையாகத் திட்டமிட்டு இரவு நேர தூக்கம் கெடாமலும் **பாதுகாப்பான பயணத்தை மேற்கொள்ளவும் உடல் ஆரோக்கியத்திற்கான உடற்பயிற்சியினை செய்யவும் இந்த பய உணர்வை தூண்டுகோலாக பயன்படுத்திக் கொள்ள வேண்டும்.** நமக்கு ஏற்பட்டுள்ள பயத்தை உடல் ஆரோக்கியத்திற்கான தூண்டுகோலாக எடுத்துக் கொண்டு, புறத்தில் தேவையான செயலை செய்யவேண்டும்.

எந்தக் காரணம் கொண்டும் அகத்தில் ஏற்பட்ட பயத்தை நிர்வாகம் செய்வது, தடுக்க முயற்சி செய்வது, மாற்றியமைக்க முயற்சி செய்வது, கவனத்தை வேறு பக்கம் திசைதிருப்ப தியானம் செய்வது, கடவுளை துணைக்கு நாடுவது என எந்த

முயற்சியும் கூடாது. எதுவும் உதவாது. **நம் அகத்தை பொறுத்தவரையில், போரில் எல்லா ஆயுதங்களையும் இழந்து கைகள் இரண்டும் பின்னால் கட்டப்பட்டு எதிரிகள் சுற்றிவளைத்த நிலையில் மண்டியிட்டு தலைவணங்கி தப்பி பிழைப்பதற்கு எந்த ஒரு வழியும் இல்லாத நிராயுதபாணியாக சரணாகதி அடைந்த மன்னனின் நிலையில் நாம் இருக்க வேண்டும்.**

ஓர் உதாரணம் இரவு நேரம் ரோட்டில் நாம் மட்டும் தனியாக நடந்து செல்கிறோம். ஒரு கருப்பு நாய் நம்மைப் பார்த்து கடிப்பதற்கான முகபாவனையுடன் குரைத்துக்கொண்டே நம்மை நோக்கி வருகிறது என்று வைத்துக் கொள்வோம். இங்கு நமக்கு பய உணர்வு ஏற்பட்டால்தான் அங்கிருந்து வேகமாக தப்பி ஓடி நாயிடம் இருந்து நம்மை காப்பாற்றிக் கொள்ள முடியும். அகத்தில் நமக்கு ஏற்பட்ட பயம் அகத்தை நிர்வாகம் செய்வதற்காக அல்ல. புறத்தில் நம்மை பாதுகாத்துக் கொள்வதற்கான தூண்டுதல் உணர்வே ஆகும். நமக்கு ஏற்படும் அத்தனை வேண்டாத உணர்வுகளையும் அகத்தில் மாற்றி அமைக்கவோ, சீர்படுத்தவோ சரிபடுத்தவோ நிச்சயமாக தேவையில்லை. மாறாக புறத்தை நிர்வாகம் செய்வதற்கு, செயல் செய்வதற்கு நமக்குத் தேவையான தூண்டுகோலாக அந்த உணர்வையே பயன்படுத்திக்கொள்ளலாம்.

இதன் பிறகும் கூட பாதுகாப்பான சூழ்நிலையிலும் சில நேரம் தேவையற்ற பய உணர்வு ஏற்படலாம். அதற்கு நாம் என்ன செய்ய வேண்டும்? இதே உதாரணத்தை வேறு கோணத்தில் பார்ப்போம். நாயிடம் இருந்து நாம் தப்பி வீட்டுக்கு வந்து சேர்ந்து விட்டோம். இப்பொழுது பாதுகாப்பாகத்தான் இருக்கிறோம். இருப்பினும் அந்த நாயை பற்றிய பயம் மனதில் இருந்து கொண்டே இருக்கிறது. இப்போது இந்த பய உணர்வு போவதற்கு நாம் ஏதாவது செய்ய வேண்டுமா? புறத்தில் எதுவும் தேவையில்லை என்ற போது அந்த பய உணர்வை கண்டு கொள்ளத் தேவையில்லை. நமது பய உணர்வுக்கு முழு சுதந்திரம் வழங்கும் போது நாமும் பய உணர்விலிருந்து முழு சுதந்திரம் பெற்றுவிடுகிறோம்.

அகத்தில் நமக்கு எப்போதும் எந்த வேலையும் இல்லை. அகத்தில் தோன்றும் உணர்வுகளை புற வாழ்விற்கு தேவையெனில் தூண்டுகோலாக பயன்படுத்திக் கொள்ளலாம். தேவை இல்லாத பட்சத்தில் அதன் போக்கில் அப்படியே விட்டு விடும் போது தாமாக தோன்றியது தாமாகவே மறைந்து விடும்.

## ஸ்ரீ பகவத் பவனில் டிசம்பர் மாதத்தில் 5 நாள் ஞான முகாம்

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் நான்கு நாள் ஞான முகாம் வருகின்ற நவம்பர் மாதத்தில் சேலத்தில் நடைபெற உள்ளது.

| | | |
|---|---|---|
| இடம் | : | ஸ்ரீ பகவத் பவன், ஜருகு மலை அடிவாரம், கொடம்பக்காடு, பெரிய கவுண்டாபுரம், காரிப்பட்டி (Po.) சேலம் - 636 106. |
| நாள் | : | **21.12.2018** வெள்ளிக்கிழமை மாலை 6.00 மணிமுதல் **25.12.2018** செவ்வாய்கிழமை மாலை 3.00 மணிவரை |

ஞான முகாம் 22.12.2018 சனிக்கிழமை காலை 9.00 மணிக்கு வகுப்பு தொடங்கப்படும். உங்கள் வருகையை முன் அறிவிப்பு செய்யுமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

**செலவு பகிர்வு**

ரூ. **5000/-** நபர் ஒருவருக்கு

செலவு பகிர்வுக் கட்டணத்தை வழங்க இயலாதவர்கள் தனிப்பட்ட முறையில் விண்ணப்பிக்கலாம்.

அனைவரும் வருக! ஞானத் தெளிவு பெறுக...

- ஆண்கள் மற்றும் பெண்கள் தங்குவதற்கென தனித்தனி இடவசதி உள்ளன.
- ஞான முகாமில் 50 அன்பர்கள் மட்டுமே கலந்துகொள்ள இடமிருப்பதால் முன்பதிவு அவசியம்.

**முன்பதிவு செய்யும் வழிகள்**

| | | |
|---|---|---|
| M.O, D.D. (or) Cheque | : | வரைவோலை அனுப்புபவர்கள் A/c Sri Bagavath Mission என்ற பெயரில் சேலத்தில் செல்லத்தக்கதாக அனுப்புமாறு கேட்டுக்கொள்கிறோம். |
| Direct Payment | : | நேரடியாக வங்கியில் செலுத்துபவர்கள் கீழ்க்கண்ட வங்கிக் கணக்கில் செலுத்தலாம். **HDFC Bank Sri Bagavath Mission A/c No. 15907620000075, NEFT IFSC : HDFC 0001590 Car Street Branch, Salem** |

**ஸ்ரீ பகவத் மிஷன்,** 31, இராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம்-3. கைப்பேசி : 9994205880, 97891 65555

# ஆசிரியர் பகுதி

K.S. ஜீவமணி
செல் : 97891 65555



**பகவத் பாதையில் பயணிக்கும் அனைவருக்கும் சக பயணியின் வணக்கம்.**

பகவத் பாதையில் பயணித்துக் கொண்டிருக்கும் நமது பயணம் 2011 ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் தொடங்கப்பட்டது. தற்போது ஏழு ஆண்டுகள் நிறைவடைந்து இம்மாதம் எட்டாவது ஆண்டில் அடியெடுத்து வைத்துள்ளோம். பகவத் பாதையால் இணைந்த நமது உறவுக்கு வயது ஏழு. ஸ்ரீ பகவத் ஐயா வழங்கும் ஞானத் தெளிவை தேடுதல் உள்ள அனைவருடனும் பகிர்ந்து கொள்ள வேண்டும் என்ற நோக்கத்துடன் தொடங்கப்பட்ட நமது பயணம் பலருக்கும் ஞான தெளிவை கொடுத்து மன துயரங்களிலிருந்து விடுதலையை வழங்கிக் கொண்டிருக்கிறது.

மேலும் நமது பாதையில் வெளிவரும் ஸ்ரீ பகவத் ஐயாவின் கட்டுரைகள், சரவணன் ஐயாவின் கேள்வி பதில்கள் மற்றும் ஜென் கதைகள் என அனைத்தும் எளிமையாக ஞானத்தை புரிந்து கொள்ள உதவியாக இருக்கின்றன. எனவே பலரும் வெளிவந்த அனைத்து பகவத் பாதை இதழ்களையும் பாதுகாத்து வருகின்றனர். புதிய அன்பர்களும் பழைய இதழ்களை, தேட ஆரம்பித்து விட்டனர். நாம் ஏற்கனவே 2011 ஆம் ஆண்டு முதல் 2014 ஆம் ஆண்டு வரை உள்ள அனைத்து இதழ்களையும் **பகவத் பாதை – ஞான பெட்டகம்** என்ற பெயரில் ஒரு நூலாக வெளியிட்டு இருந்தோம். தற்போது மீண்டும் செப்டம்பர் 2018 மாத இதழ் வரை உள்ள அனைத்து இதழ்களிலுள்ள அய்யாவின் கட்டுரைகளை தனி நூலாகவும் சரவணன் ஐயாவின் கேள்வி-பதில்களை தனி நூலாகவும் ஜென் கதைகள் தனி நூலாகவும் வெளியிட எண்ணியுள்ளோம்.

ஆன்மிகத்தை பொறுத்தவரை ஸ்ரீ பகவத் ஐயா அவர்களுக்கு முன், ஸ்ரீ பகவத் ஐயா அவர்களுக்குப் பின் என்று குறிப்பிடும் அளவிற்கு ஞானம் பெறுவோரின் எண்ணிக்கை மிகவும் அதிகரித்துள்ளது.

அடைவதற்கு அரிதாக இருந்த ஞானமும் விடுதலையும் ஸ்ரீ பகவத் ஐயாவின் வருகைக்குப் பிறகு மிகவும் எளிதாகி விட்டது. உண்மையில் ஆன்மிகத்தில் மிக உயர்ந்த நிலையாக விடுதலை கருதப்பட்டாலும் ஒவ்வொரு மனிதனின் பிறப்பியல்பும் அதுவே. குழந்தைப் பருவத்தில் அனைவரும் விடுதலையோடு தான் இருக்கிறார்கள். அறிவு வளர வளரத்தான் நாம் நம் இயற்கையான விடுதலையோடு அறிவைக் கொண்டு முரண்பட்டு விடுதலையை தடை செய்து கொண்டிருக்கிறோம். அந்த அறிவுத்தடையைத்தான் பகவத் ஐயா புரிதலின் மூலம் நீக்குகிறார்.

எத்தனையோ ஞானிகள் ஞானத்தையும் விடுதலையையும் அவரவர்கள் வழியில் சொல்லி விட்டு சென்று விட்டார்கள். அவை புரிந்தும் புரியாதது போலும் முரண்பாடோடு அமைந்துவிட்டது. வேதங்கள் கூறும் தத்துவங்களும் சரியான விளக்கம் பெறாமல் போய்விட்டன. இதனால் இதுவரை மறைபொருளாகவும் இரகசியமாகவும் இருந்த ஆன்மஞானம் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் புதிய அணுகுமுறையில் அறிவியல் ரீதியாக வழங்கப்படுவதால் மிகவும் எளிமையாகிவிட்டது.

இந்த ஞானம் மீண்டும் இரகசியமாகவும் மறைபொருளாகவும் மாறிவிடாமல் உலகமக்கள் அனைவரிடமும் கொண்டு சேர்ப்பது நமது பகவத்பாதையின் நோக்கமாகும்.

அந்த வகையில் செப்டம்பர் மாதம் இரண்டாம் தேதி சென்னை காமராஜர் அரங்கில் நடைபெற்ற ஞான முகாமில் 1800 அன்பர்களுக்கு கொண்டு செல்ல முடிந்தது. இது நம் அனைவரின் முயற்சியாலும் சிறந்த பணியாலும் நடைபெற்றது.

தற்போது வெளி நாட்டவர்கள் பலரும் ஐயா வழங்கும் ஞானப் புரிதலை பெறுவதற்கு ஆர்வம் காட்டி வருகின்றனர்.

இத்தருணத்தில் ஸ்ரீ பகவத் மிஷனின் தொண்டில் பங்கு பெறும் வண்ணம் புரவலர்களாகவும் நிறுவனர்களாகவும் இணைந்து செயலாற்றி வரும் அனைவருக்கும் உளமார்ந்த நன்றியை தெரிவித்துக் கொள்கிறோம்.

**வாருங்கள் ஒன்றிணைந்து செயல்படுவோம்...**

**ஞானத்தால் உலகிற்கே ஒளியேற்றுவோம்...**

# ஸ்ரீ பகவத் பவனில் நவம்பர் மாதத்தில் 4 நாள் ஞான முகாம்

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் நான்கு நாள் ஞான முகாம் வருகின்ற நவம்பர் மாதத்தில் சேலத்தில் நடைபெற உள்ளது.

| | | |
|---|---|---|
| இடம் | : | ஸ்ரீ பகவத் பவன்,<br>ஜருகு மலை அடிவாரம்,<br>கொடம்பக்காடு, பெரிய கவுண்டாபுரம்,<br>காரிப்பட்டி (Po.) சேலம் - 636 106. |
| நாள் | : | **22.11.2018** முதல்<br>**25.11.2018** ஞாயிறு வரை |
| நேரம் | : | வியாழன் மாலை 5.00 மணிமுதல்<br>ஞாயிறு மதியம் 3.00 மணிவரை |

ஞான முகாமில் கலந்த கொள்பவர்கள் வியாழன் மதியமே ஸ்ரீ பகவத் பவன் வந்து தங்கிக் கொள்ளலாம். உங்கள் வருகையை முன் அறிவிப்பு செய்யுமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

செலவு பகிர்வு

ரூ. **5000/-** நபர் ஒருவருக்கு

செலவு பகிர்வுக் கட்டணத்தை வழங்க இயலாதவர்கள் தனிப்பட்ட முறையில் விண்ணப்பிக்கலாம்.

அனைவரும் வருக! ஞானத் தெளிவு பெறுக...

- ஆண்கள் மற்றும் பெண்கள் தங்குவதற்கென தனித்தனி இடவசதி உள்ளன.
- ஞான முகாமில் 50 அன்பர்கள் மட்டுமே கலந்து கொள்ள இடமிருப்பதால் முன்பதிவு அவசியம்.

**முன்பதிவு செய்யும் வழிகள்**

| | | |
|---|---|---|
| M.O, D.D. (or) Cheque | : | வரைவோலை அனுப்புபவர்கள் A/c Sri Bagavath Mission என்ற பெயரில் சேலத்தில் செல்லத்தக்கதாக அனுப்புமாறு கேட்டுக்கொள்கிறோம். |
| Direct Payment | : | நேரடியாக வங்கியில் செலுத்துபவர்கள் கீழ்க்கண்ட வங்கிக் கணக்கில் செலுத்தலாம்.<br>**HDFC Bank Sri Bagavath Mission A/c No. 1590762000075,**<br>**NEFT IFSC : HDFC 0001590 Car Street Branch, Salem** |

**ஸ்ரீ பகவத் மிஷன்,** 31, இராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம்-3. கைப்பேசி : 9994205880, 97891 65555

# பகவத் பாதை சந்தா விபரம்

நமது பகவத் பாதை மாத இதழானது தற்போது மாதம் 10-ம் தேதிக்குள் தபாலில் அனுப்பி வைக்கப்படுகிறது. இது அதிகபட்சமாக 15 நாட்களுக்குள் அனைவரது இல்லங்களையும் வந்து சேரும் என்று எதிர் பார்க்கிறோம். எனவே ஒவ்வொரு மாதமும் 25ம் தேதிக்குள் "பகவத் பாதை" தங்களுக்கு வராதவர்கள் போனில் தொடர்பு கொண்டோ அல்லது "Pathai Missing" என்று Type செய்து சந்தா எண்ணுடன் தங்களது முழு முகவரியையும் கீழ்கண்ட எண்ணுக்கு SMS அனுப்பியோ தகவல் தெரிவிக்குமாறு கேட்டுக் கொள்கிறோம்.

இதுவரை சந்தா செலுத்தாதவர்கள், அல்லது புதுப்பிக்காதவர்கள் கீழ்கண்ட ஏதேனும் ஒரு வகையில் சந்தா செலுத்துமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

பகவத் பாதை மாத இதழுக்கு சந்தா செலுத்த விரும்புபவர்கள் கீழ்க்காணும் ஏதேனும் ஒரு வழியில் செலுத்தலாம்.

ஓர் ஆண்டு சந்தா - ரூ.100/- | ஐந்தாண்டு சந்தா - ரூ. 500/- | ஆயுள் சந்தா - ரூ. 1000/-

சந்தா தொகையை "Sri Bagavath Mission" என்ற பெயரில் M.O. அல்லது சேலத்தில் செல்லத் தக்க D.D. (or) Cheque மூலம் அனுப்பலாம்.

www.sribagavathmission.org (or) www.praveagam.org என்ற இணைய தளத்தில் Credit Card / Debit Card மூலமாகவும் சந்தா செலுத்தலாம்.

வங்கிக் கணக்கில் நேரடியாக செலுத்துபவர்கள் HDFC Bank-ல் Sri Bagavath Mission A/c No. 1590762000075, NEFT IFSC: HDFC 0001590 என்ற கணக்கில் செலுத்தலாம்.

Bank A/c ல் நேரடியாக செலுத்தியவர்கள் உங்கள் முகவரியை 92620 61838 என்ற எண்ணிற்கு SMS மூலம் தகவல் தெரிவிக்க வேண்டுகிறோம்.

# நிகழ்ச்சி நிழல்கள்


ஸ்ரீ பகவத் ஐயா அவர்களுடன்
வியட்நாம் அன்பர்கள்


ஸ்ரீ பகவத் ஐயாவின் பிறந்த நாளில்...




ஸ்ரீ பகவத் ஐயாவின் பிறந்த நாளில்...


ஞாயிறுதோறும்
நடைபெறும்
Google Hangout-இல்




ஸ்ரீ பகவத் ஐயாவுடன் அன்பர்கள்


ஸ்ரீ பகவத் ஐயா அவர்களுடன்
முனைவர் G. அழகர் இராமானுஜம்.


ஸ்ரீ பகவத் ஐயாவின்
பிறந்த நாளில்...

# ஸ்ரீ பகவத் பவன் புரவலர்கள்

அன்பு உள்ளங்களுக்கு ஓர் அன்பான வேண்டுகோள்.

ஸ்ரீ பகவத் மிஷன் என்பது பணப்புழக்கம் மிகுந்த ஒரு கார்ப்பரேட் நிறுவனம் அல்ல. கட்டணம் வாங்கிக் கொள்ளும் கல்வி நிறுவனமும் அல்ல. ஐயா அவர்களுக்கு தங்கியிருக்க வீடு ஒன்று தேவைப்பட்டது. நம் அனைவரது ஒத்துழைப்பாலும் **ஸ்ரீ பகவத் பவன்** உருவானது. தற்போது அந்த இல்லம் ஐயாவின் இருப்பிடமாகவும், கற்றிட வருவோரின் குருகுலமாகவும், நம் அனைவரது பண்ணை வீடாகவும் செயல்பட்டு வருகிறது. ஸ்ரீ பகவத் பவனின் நித்திய நிர்வாகச் செலவினங்களுக்கான நித்திய நிதி ஒன்றும் தேவைப்படுகிறது.

'நிரந்தர வைப்பு நிதி எதனையும் தற்போது உருவாக்க வேண்டாம்' என்று ஐயா கூறிவிட்டதால் நிரந்தரப் புரவலர் குழு ஒன்றை உருவாக்க முடிவு செய்துள்ளோம். முதற்கட்டமாக 100 ஆர்வலர்கள் கொண்ட புரவலர் குழு ஒன்று மே மாதம் முதல் தொடங்கப்பட்டுள்ளது. அதன்படி ரூ. 1000/- முதல் ஏதாவது ஒரு தொகையை மாதந்தோறும் அல்லது ரூ. 12,000/- முதல் ஏதாவது ஒரு தொகையை வருடந்தோறும் வழங்கும் ஆர்வம் உள்ளவர்கள் தங்களை ஸ்ரீ பகவத்பவனின் புரவலர்களாக இணைத்துக் கொள்ளலாம். **அதற்காக ஏற்றுக்கொண்ட முழுத்தொகையையும் மாதந்தோறும் வழங்கியே ஆகவேண்டும் என்ற நிபந்தனை எதுவும் புரவலர்களுக்குக் கிடையாது.**

வங்கிக் கணக்கில் நேரடியாக செலுத்துபவர்கள் **HDFC Bank Sri Bagavath Mission A/c No. 15907620000075, NEFT IFSC : HDFC 0001590 Car Street Branch, Salem** என்ற கணக்கில் செலுத்தலாம். **Bank A/c-** ல் நேரடியாக செலுத்தியவர்கள் தகவலை **97891 65555** என்ற எண்ணிற்கு தெரிவிக்க வேண்டுகிறோம்.



# ஜென் கதை

## "காமமும் விடுதலையும்"



ஓர் அரச குமாரன் முக்தி வேண்டி புத்தரிடம் தீட்சை பெற வந்தான். முதல் நாள் அவனை பிச்சை யாசிக்க ஒரு வீட்டிற்கு அனுப்பி வைத்தார். புத்தர் கூறிய வீட்டின் வாயிலில் நின்று பிச்சை கேட்டான். பிச்சை கிடைத்தது. உண்டு, திரும்பி வந்தான். புத்தரிடம் சென்று, "மன்னியுங்கள், என்னை மீண்டும் அங்கே அனுப்பாதீர்கள்." என்று வேண்டினான்.

புத்தர், "என்ன ஆயிற்று?" என்று கேட்டார். அவன் பதிலளித்தான், "அந்த இடத்தை நோக்கி நடந்து கொண்டிருந்தபோது என் மனதில் எனக்குப் பிடித்தமான உணவு வகைகளின் எண்ணம் தோன்றியது. அந்த இடத்தை அடைந்தபோது, வீட்டுத் தலைவி நான் எண்ணிய உணவு வகைகளையே பரிமாறினாள். நான் தற்செயலாக நேர்ந்தது என எண்ணினேன். அதன் பிறகு உணவு உண்டபோது, தினமும் எனது வீட்டில் உணவுக்குப் பிறகு சில நிமிடங்கள் ஓய்வு எடுத்துக் கொள்ளும் பழக்கம் நினைவுக்கு வந்தது. 'இன்று நம்மை யார் ஓய்வு எடுத்துக் கொள்ளுமாறு கூறப் போகிறார்கள்' என்று எண்ணினேன். உடனேயே அந்தப் பெண், "சுவாமி! போஜனத்திற்குப் பின் சில நிமிடங்கள் தங்கி ஓய்வு எடுத்துக் கொண்டு செல்லுங்கள். கிருபை செய்யுங்கள். என் இல்லம் பவித்ரமாகிவிடும்!" என்று வேண்டினாள். எனக்கு மிகுந்த ஆச்சரியமாக இருந்தது. மீண்டும், இதுவும் தற்செயல்தான், 'என் மனதிலும் தோன்றியது. இவளும் கூறினாள்' என்று சமாதானம் செய்து கொண்டேன்.

ஓய்வு எடுக்க படுத்த போது, "இது எனது சொந்தக் கட்டிலும் இல்லை, படுக்கையும் இல்லை," என்ற எண்ணம் தோன்றியது. "வேறு ஒருவரது கூரை நிழலில் வேறு ஒருவரது பாயில் படுத்திருக்கிறேன்." என்று எண்ணினேன். உடனே அந்தப் பெண், "பிட்சு, படுக்கை உங்களுடையதுமல்ல, என்னுடையதுமல்ல!" என்றாள். எனக்கு மிகவும் கலக்கமாகிவிட்டது. தற்செயலாக மீண்டும் மீண்டும் நேருவது சாத்தியமல்ல.

நான் அவளிடம் கலவரத்துடன் கேட்டேன். "எனது எண்ணங்கள் உன்வரை எட்டுகின்றனவா? எனக்குள்ளே ஓடும் நினைவுப் பெருக்கு உனக்குத் தெரிகிறதா?" என்று.

அவள், "எப்பொழுதும் தியானம் செய்து... செய்து... எனது சிந்தனைகள் சூனியமாகிவிட்டன. இப்பொழுது மற்றவர்களது சிந்தனைகளும் காட்சியளிக்கின்றன!" என்றாள். நான் பயந்து நடுங்கி ஓடி வந்து விட்டேன். இனி என்னைத் தயவு செய்து அங்கே அனுப்பாதீர்கள்." என்றான்.

புத்தர் விடவில்லை. "ஏன்?" என்று கேட்டார்.

ஜென் கதை தொடர்ச்சி...

அவன் தயங்கியபடி, "எப்படிக் கூறுவேன்?" அந்த அழகிய யுவதியைக் கண்டு என் மனதில் காம எண்ணங்களும் எழுந்தன. அவற்றை கட்டுப்படுத்த முயன்றும் முடியவில்லை. உணவைப் பற்றியும் ஓய்வைப் பற்றியும் நினைவு வந்தால் பரவாயில்லை. அவள் மீது ஏற்படும் காம எண்ணங்கள் தவறானதல்லவா? என்ன செய்வது என்று தெரியவில்லை. அவள் என்னைப் பற்றி தவறாக நினைத்திருப்பாள். நாகரிகம் கருதி அவள் அதை வெளிப்படுத்தவில்லை. நான் எந்த முகத்தைக் கொண்டு அங்கே செல்வேன்? எப்படி அந்த வாயிலில் சென்று பிச்சை கேட்பேன்? மீண்டும் என்னை அங்கே அனுப்பாதீர்கள்!" என்றான்.

புத்தர், "அங்கேயேதான் நீ செல்ல வேண்டும். இது உனது சாதனையின் ஒரு பகுதி. உனக்கு எண்ணத்தை பற்றிய புரிதல் ஏற்படும் வரை நீ அங்கேயேதான் செல்ல வேண்டும். இந்த தடவை எண்ணத்தை அதன் போக்கில் விட்டு விடு. அவற்றை பற்றி அக்கறை கொள்ளாதே. உன் வேலை யாசிப்பதுதான். அதில் மட்டும் கவனம் செலுத்து" என்றார்.

அடுத்த நாள் அந்த வீட்டிற்கு யாசிக்க சென்றான். போகும் வழியிலேயே "இன்று தேவையற்ற எண்ணங்கள் எழாமல் கவனத்துடன் இருக்க வேண்டும் என்று எண்ணிக் கொண்டான். அங்கு செல்லும் வரை எந்தப் பிரச்சினையும் இல்லை. அங்கு சென்று அந்த அழகிய யுவதியைக் கண்டதும் அவனது கட்டுக்குள் அடங்காமல் காம எண்ணங்கள் எழத்தொடங்கின. மிகுந்த போராட்டத்தில் இருந்தான். அவள் அவனை பரிதாபமாக பார்த்தாள். அவள் பார்வை அவனுக்கு அவனை ஏளனமாக பார்ப்பது போல் தோன்றியது. அவள் அவனுக்கு உணவு எடுத்து வர உள்ளே சென்று திரும்புவதற்குள் அவன் அங்கிருந்து ஓடி வந்து விட்டான். புத்தரிடம் சென்று "எவ்வளவு முயன்றும் எனது எண்ணங்களை கட்டுக்குள் கொண்டுவர முடியவில்லை. இனி என்னை அங்கு அனுப்பாதீர்கள். மன்னியுங்கள்", என்றான்.

புத்தர், "உன் எண்ணங்களை கட்டுப்படுத்த முயற்சி செய்யாதே. அது முடியாத காரியம்," என்றார். "அந்த காம எண்ணத்தை கட்டுப்படுத்தாவிட்டால் அது வளர்ந்து தவறான செயலில் ஈடுபட்டுவிடமாட்டேனா?" என்றான்.

"அதை நீ கட்டுப்படுத்த போராடும் போதுதான் அந்த வலையில் நீ மாட்டிக்கொள்வாய். அது தேவையற்ற வேலை" என்றார்.

"பிறகு நான் என்ன செய்ய வேண்டும்? அந்த எண்ணம் எழாமல் பார்த்துக் கொள்ள நான் என்னதான் செய்ய வேண்டும்?" என்றான்.

புத்தர், "இதற்கு ஒரு வழி இருக்கிறது" என்றார்.

அவன், "என்ன வழி, சொல்லுங்கள் சுவாமி" என்றான். இவர்களுக்கு அருகில் ஒரு நிலைக்கண்ணாடி இருந்தது. புத்தர் அவனை அதற்கு முன்னால் நிற்க வைத்தார். "உனக்கு மிக முக்கியமான வேலை ஒன்று கொடுக்கப் போகிறேன்" என்றார். "நான் என்ன செய்ய வேண்டும். சொல்லுங்கள் சுவாமி," என்றான்.

"இந்த நிலைக்கண்ணாடியில் உனது பிம்பம் பிரதிபலிக்காமல் பார்த்துக்கொள். தொடர்ந்து விழிப்புடன் கவனித்து வா" என்றார்.

அவன், "இது எப்படி சுவாமி முடியும்? நான் கவனித்துக் கொண்டிருக்கும்வரை என் பிம்பம் பிரதிபலித்துக் கொண்டுதானே இருக்கும்," என்றான்.

"இது போலத்தான், நீ எந்த எண்ணம் வரக்கூடாது என்று முயற்சி செய்து கொண்டிருக்கிறாயோ அது வரை அந்த எண்ணமாகவேதான் நீ முழுவதும் இருப்பாய். மனம் என்பது கண்ணாடியை போன்றது. அதில் தோன்றும் எண்ணங்களும் உணர்வுகளும் பிரதிபலிக்கும் பிம்பங்களை போன்றது. அவற்றை நிர்வகிக்க தேவையில்லை" என்றார்.

"பிறகு அவற்றை எப்படித்தான் போக்குவது," என்றான். "அந்த எண்ணங்களை நீ உருவாக்கினாயா?" என்றார் புத்தர். "இல்லை, தாமாகவே தோன்றியது என்றான். "தாமாகவே தோன்றியது தாமாகவே மறைந்துவிடும். அது உனது வேலையல்ல. எல்லா எண்ணங்களும் தாமாகத்தான் தோன்றும். தோன்றிய பிறகுதான் தோன்றியதே உனக்கு தெரியவரும். தாமாக தோன்றியதுபோல் தாமாகவே மறைந்தும் விடும். அவற்றுக்கு நாம் பொறுப்பெடுக்கத் தேவையில்லை. பொறுப்பெடுத்துக் கொண்டால் மட்டுமே அவை உனது சிந்திப்பாக மாறிவிடும். இந்த உண்மையை புரிந்து கொண்டால் மட்டும் போதும்" என்றார் புத்தர்.

நன்கு புரிந்து கொண்டான் அரசகுமாரன். அடுத்த நாள் அந்த வீட்டிற்கு சென்றான். அந்த அழகிய யுவதியை சந்தித்தான். **அவனுக்கு காம எண்ணமும் தோன்றியது. இது தாமாக தோன்றிய எண்ணம் என்ற உண்மையை புரிந்து கொண்டு அதனோடு பந்தமில்லாமல் இருந்தான். அவன் அதனோடு போராடாததால் தாமாக தோன்றிய எண்ணம் தாமாகவே மறைந்தும் விட்டது. இவன் பிரவாகமாக ஓடும் ஆற்றைப்போல் சுதந்திரமாகவும் தூய்மையாகவும் இருந்தான்.** இவன் விடுதலை இயக்கத்தில் இருப்பதை உணர்ந்த அந்த பெண் அவனை கைகூப்பி வணங்கினாள்.

Registration Number of the Registered News Paper TNTAM/2014/57698
Postel Registration Number : TN/WR/SL(E)/22/2018-2020 Posted at Salem HOP 636001. On 10th of every month.

Published by Shri. V.A.P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu. India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003. Editor : Shri. K.S. Jeevamani Cell : 97891 65555